# THE MADRAS JUNIOR



JANUARY 1955





RED CROSS ANNUAL FUND RAISING CAMPAIGN inaugurated by Sri K. Kamaraja Nadar (Chief Minister) under the Presidentship of Dr. P. V. Cherian (Chairman, Legislative Council) at Rajaji Hall on the 5th November 1954. They are seen with the Red Cross Members and Chairman of the Fund Raising Campaign Committee (Dr. U. Krishna Rao). The Members of the Junior Red Cross Groups who participated in the Rally held in connection with the Campaign are also seen in the background sitting on the steps of Rajaji Hall. *(Report appears in this issue.)*

# JUNIOR RED CROSS EXHIBITION

**held in connection with the Headmasters' Seminar on Secondary Education, Coonoor, June 1954.**







Pictures show the delegates to the Seminar from Madras and Andhra States observing the Junior Red Cross exhibits displayed at the camp.



அன்பார்ந்த ஜூனியர்களே,

முதலில் உங்கள் செயல் முறைகளில் நீங்கள் அனை வரும் 1955ல் சந்தோஷமும், மேன்மையும், வெற்றியும் பெற்றிருக்க உங்களை வாழ்த்துகிறேன். எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி வட இந்திய வெள்ள நிவாரண நிதிக்காக உதவியளிக்க நம் ஜூனியர் சிலர் முன்வந்ததை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகி றேன். பல தொகுதிகள், பெரும்பாலாகப் பெண்கள் பள்ளிக்கூடத் தொகுதிகள் டெல்லித் தலைமைக் காரி யாலயம், சென்னை ராஜ்யத் தொகுதிகளால் அவ்வப் பொழுது நடத்தப்பட்ட பல போட்டிகளிலும் கலந்துகொண்டு பல பரிசுகளைப் பெற்றன. 1954ல் ஜூனியர் செஞ்சிலுவைச் சங்கத் தொகுதி களின் பதிவுகளிலும், ஜூனியர்களின் அங்கத்தின ராதலிலும் சிறிது குறைவு ஏற்பட்டிருப்பினும் முந்தின வருஷத்தைவிடக் குறிப்பிடத்தக்க அள வில் நம் ஜூனியர்களின் செயல் முறைகளில் சீர்திருத்தங்கள் காணப்பட்டன. எனினும், மற்ற ராஜ்யங்களோடும், அயல் நாடுகளோடும் ஒப் பிட்டுப் பார்க்கும்பொழுது, நம் ஜூனியர்கள் தங்கள் செயல் முறையில் பின்னணியில் நிற்கிறார்கள். ஆனால், அவர்கள் கூடிய சீக்கிரத்தில் இவ்வுயர்வுப் பணிகளில் முதலிடம் பெறுவர் என நான் நம்புகிறேன்.

ஜில்லாக் கல்வி இலாகா ஆபீஸர் சேர்மனுக அனு பவமும் ஆற்றலும் நிரம்பிய அங்கத்தினர்கொண்ட ஒரு ஜில்லா ஜூனியர் செஞ்சிலுவை உபகமிட்டி ஒவ் வொரு ஜில்லாவிலும் இருப்பதாலும், இக்கமிட்டி ஜில்லாவில் ஜூனியர் செஞ்சிலுவைச் சங்கக் காரியங் களுக்கு உத்தரவாதமானதாலும் நான் இவ்வாறு கூறினேன். எனவே, ஜூனியர்கள் வேண்டும் உதவி களை இவ்வழிகளில் நிச்சயமாகச் செய்யும் உபகமிட்டி கன்வீனரைக் கலந்து அவ்வத்தொகுதிப் பணிகளைப் பெருக்க ஜூனியர்களுக்கு வசதிகள் மிகுதியாக இருக் கின்றன. மற்றத் தொகுதிகளிலும் நாடுகளிலுமிருக் கும் ரெட் கிராஸ், ஜூனியர் ரெட் கிராஸ் பற்றிய சங்கதிகளைக் கொடுப்பது அதிகார பூர்வமான ரெட் கிராஸ் பத்திரிகை 'மதராஸ் ஜூனியர்' ஒன்றே யாகும்.

எனவே, நீங்கள் ஒவ்வொருவரும் இப்பத்திரிகை வாசிப்பை உங்கள் முக்கியக் குறிக்கோளாகக்கொள்ள வேண்டும். அல்லது உங்கள் பள்ளிக்கூடங்களுக்குப் பத்திரிகை வந்தவுடன் கவுன்சிலரைக் கொண்டு படித் துத் தெரிந்துகொள்ள வேண்டும். குறித்த தேதியில் பத்திரிகை வராவிட்டால், பத்திரிகைகள் பிரசுரமான வுடன் மதராஸ் ஆபீஸிலிருந்து உங்கள் ஜில்லாத் தொகுதிகளுக்கு விநியோகிக்கக் கன்வீனருக்கு அனுப் பப்படுவதால், அதுபற்றி உங்கள் ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப்கமிட்டிக் கன்வீனரைக் கேட்கவேண் டும். ஜில்லாக் கமிட்டி கன்வீனர்களின் பெயர்களும், விலாசங்களும் இவ்விதழில் பிரசுரிக்கப்பட்டுள்ளன.

உங்கள் நலம் நாடும்,

**T. P. சந்தானகிருஷ்ண நாயுடு,**

கௌரவ டைரெக்டர்,

ஜூனியர் ரெட் கிராஸ்,

சென்னை ராஜ்யம்.

# அறிக்கைகள்

## இலக்கியப் புத்தகங்கள், விளம்பர அறிக்கைகள், பொத்தான்கள் முதலியவைகளைப் பெறுதற்கு அனுப்பும் ஒப்பந்தங்கள்

மேற்கண்ட பொருள்களை எம்மிடம் பெற விரும்புபவர் பணம் அனுப்பும் பொழுது அவற்றிற்குரிய தபால் செலவு, ரிஜிஸ்திரேஷன் கட்டணம் முதலியவற்றையும் சேர்த்து அனுப்ப வேண்டுமென்று முன்னமேயே எமது பத்திரிகை மூலமாக அறிவித்திருக்கின்றோம். ஆனால், இன்றும் ஜூனியர் ரெட் கிராஸ் கவுன்சிலர்கள் தபால், ரிஜிஸ்திரேஷன் போன்ற செலவுகளுக்கும் சேர்த்து அனுப்பாமல் தனியாகப் பணம் அனுப்புகின்றார்கள். இதை மறுமுறையும் செய்யாமல் இருக்குமாறு அவர்களை வேண்டிக் கொள்ளுகின்றோம். போதுமான பணம் அனுப்பாவிட்டால், அனுப்பிய பணத்தில் தபால், ரிஜிஸ்திரேஷன், மற்றும் இதர செலவுகளைச் சரிப்படுத்திக் கொண்டு, மீதியுள்ள பணத்திற்கே பொருள்களைக் குறைந்த அளவில் ரிஜிஸ்தர் செய்யாமல், சாதாரண தபால் மூலமாகவே அனுப்புவோம். பொருள்களுக்கு, ஒப்பந்தம் செய்துகொள்வோரே பொறுப்பாளிகள் ஆவார்கள்.

## அங்கத்தினர் பெயர் அட்டவணை (Membership Roll)

புதியதாகச் சேர்க்கப்படும் தொகுதியினருக்குத்தான் அங்கத்தினர் பெயர் அட்டவணை இனமாக ஒருமுறை கொடுக்கப்படும். ஆனால், அங்கத்தினர் பெயர் அட்டவணை வேண்டுமென்று பழைய தொகுதியிலுள்ள கவுன்சிலர்களின் வேண்டுகோள்களைப் பெறுகிறோம். அவர்கள் பழைய அட்டவணையுடன் வேண்டிய தாள்களைச் சேர்த்துக்கொண்டு, அந்தத் தாள்களில் புதியதாகச் சேர்பவர்களின் பெயரை ஒவ்வொரு வருஷமும் எழுதிக்கொண்டு வர வேண்டும் என்று அவர்களைக் கேட்டுக்கொள்கின்றோம். அவ்வாறன்றி, புதிய பெயர் அட்டவணை வேண்டும் என்று அவர்கள் விரும்பினால், தபால் கட்டணம் உள்பட 3 அணா அனுப்பினால், உடனே அவர்களுக்கு அனுப்பப்படும்.

---

# செய்தி அறிவிப்பு (Announcement)

## விளம்பர அறிக்கை—'ஜூனியர் ரெட் கிராஸ் என்ன?' என்பதைப் பற்றியும், அதன் செயல்களைப் பற்றியும்—திருத்தம் செய்த பதிப்பு

'ஜூனியர் ரெட் கிராஸும், அதன் செயலும்' என்னும் தலைப்பு அமைந்த ஒரு விளம்பர அறிக்கைப் பிரதியின் திருத்தி அமைத்த பதிப்பைக் கூடிய சீக்கிரத்தில் வெளியிடப் போகின்றோம். அதில் ஜூனியர் ரெட் கிராஸைப்பற்றிய முழு விவரங்களும், ரிஜிஸ்திரேஷன் முதலியவற்றைப்பற்றிய அரசாங்க உத்தரவுகளும் அடங்கியிருக்கும். 1955-ஆம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தமிழிலும் ஆங்கிலத்திலும் 100 பிரதிகள் ரூ. 2-4-0 வீதம் அப்பிரதிகள் விற்பனைக்குக் கிடைக்கும். வேண்டுவோர் எத்தனை பிரதிகள் வேண்டும் என்பதைக் குறித்து, அதற்குரிய பணத்தோடு அனுப்ப வேண்டும்.

---

**மற்றொருவர் :—**

பணமும் பணத்தோடு மகிழ்வும்
பலநலம் தருவது பாலே...

*(எல்லோரும்)*

ஆடுவோம்...பாடுங்கள்......

**பாட்டு:**—*(மற்றொருவர்)*

பாலருந் தம்மா பாலருந்து
பாலா மணியே பாலருந்து
பாவையர் நாங்கள் உனைவளர்ப்போம்
பாலருந் தம்மா பாலருந்து.

**புரதம்:**—நிறுத்துங்கள் உங்கள் ஆட்டத்தையும் பாட்டையும். அடுத்த வீட்டு அன்னம்மாள் பாலருந்தத் தொடங்கியிருப்பாள். விரைந்து அவள் வீடு செல்ல வேண்டாமா? புறப்படுங்கள்.

**பாலா:**—என்னுடன் விளையாட மீண்டும் வருவீர்களா?

**Vit. A:**—கட்டாயம் வருவோம் பாலா. நாங்கள் அனைவரும் உன் நண்பர்கள். நீ பாலருந்தும் போதெல்லாம் உன் பக்கம் வந்து ஆடுவோம், பாடுவோம்.

**பாலா:**—அப்படியானால் ரொம்ப சரி. போய் வாருங்கள். ஒவ்வொரு நாளும் நான் பாலருந்துவேன் என்று உறுதியாகச் சொல்கிறேன். இனிக்கும் பாலையருந்தி களிப்புடன் கைகோத்து ஆடுவோம். கட்டாயம் வாருங்கள்.

[பாடிக்கொண்டே அவர்கள் செல்லுகின்றார்கள்.]

ஆடுவோம் பாடுவோம் பாங்கியரே
ஆனந்தமாக உல்லாசமுடன்—விளை...(ஆடு)

---

## 1954-ஆம் வருஷத்திய அகில இந்திய ஜூனியர் ரெட் கிராஸ் சர்வதேசப் பள்ளிக்கூடக் கலைப் போட்டி

*1954-ஆம் வருஷம் ஜூலை மாதம் 'மதராஸ் ஜூனியர்' சஞ்சிகையில் பிரசுரிக்கப்பட்ட எங்கள் வேண்டுகோள்களுக்கு இணங்கி, ராஜ்யத்திலுள்ள 22 பள்ளிக்கூடங்கள் போட்டியில் கலந்துகொண்டு, 147 நமூனைக்களை அனுப்பி வைத்தன. இவைகள் தலைமைக் காரியாலயங்களுக்கு அனுப்பப்பட்டன. போட்டியில் கலந்துகொண்ட 22 பள்ளிக்கூடங்களுள் 13 சென்னைக் கார்ப்பொரேஷன் மகமதியப் பெண்கள் பாடசாலை' என்பது குறிப்பிடத் தக்கது.*

---

## காணமற்போய்விட்டது

*கீழ்க்கண்ட கௌன்சிலர்களுடைய 2894, 1177 நெம்பருள்ள கௌன்சிலர் பயிற்சி சர்டிபிகேட்டுகள் காணமற்போய்விட்டது :—*

*(1) ஸ்ரீ* Y. *கரிபஸன்னு, போர்ட் உயர்தர பாடசாலை, கொட்டலபல்லி, உரவகொண்டா, அனந்தபூர் ஜில்லா. (சர்டிபிகேட் நெ. 2894).*

*(2) ஸ்ரீ* B. J. *நாராயணஸ்வாமி, போர்டு ஆரம்பப் பாடசாலை, கொடவன்ட்லபல்லி* (Kodavandlapalli), *அனந்தபூர் ஜில்லா. (சர்டிபிகேட் நெ. 1177).*

*இத்தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குப் பிறகு மேற்கண்டவர்களுக்கு "டூப்ளிகேட்" ஸர்டிபிகேட்டுகள் வழங்கப்படும். அதன் பிறகு "ஒரிஜினல்" ஸர்டிபிகேட்டுகள் செல்லுபடியாகாது.*

---

## ஆரோக்கியப் பொருள் மூட்டைகளும் ஜிக்சா 'ப் (Jigsaw) போட்டிகளும்

சர்வ தேச நட்பை வளர்ப்பதற்காகக் கனடா ரெட் கிராஸ் சங்கம் இந்தியக் குழந்தைகளின் உபயோகங் களுக்கென ஆரோக்கியப் பொருள் மூட்டைகளையும், 'ஜிக்சா 'ப் போட்டிகளையும் கனடா ஜூனியர்களின் பரிசாகப் புது டெல்லியிலுள்ள நம் தலைமைக் காரியாலயத்திற்கு அனுப்பிற்று. இவற்றுள் தலைமைக் காரியாலயம் நமது ராஜ்யத்தில் அவசியமாக வேண்டும் பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கு ஜாதி மதப் பாகுபாடு கள் இல்லாமல் விநியோகிப்பதற்காக 25 ஆரோக்கியப் பொருள் மூட்டைகளையும், 5 ஜிக்சாப் போட்டிகளையும் கொடுத்தது. ஒவ்வோர் ஆரோக்கியப் பொருள் மூட்டைகளிலும் கீழே கொடுக்கப்பட்டுள்ள பொருள் கள் இருந்தன :—

1. சோப்பு
2. பல் தேய்க்கும் பிரஷ்
3. பல் பசை
4. முகம் துடைக்கும் துண்டுகள்
5. முகம் கழுவும் பொருள்கள்
6. சீப்புகள்
7. தலைமயிர்க் கிளிப்புகள்
8. நகம் வெட்டி (Nail file)

போட்டோப் படங்கள் இருக்குமாயின், அவை களுடன் விநியோக அறிக்கையையும் கூடிய விரைவில் அனுப்பி வைக்கத் தலைமைக் காரியாலயங்கள் விரும்பு கின்றன.

1954-ஆம் வருஷம் ஜனவரி மாதம் 31-ஆம் தேதி வேலை செய்யும் 150 அல்லது மேற்பட்ட ஜில்லாத் தொகுதிகளுக்குப் பரிசைச் சமமாகப் பகிர்ந்து கொடுக்க வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. பரிசுப் பொருள்களை அவரவர்களுடைய ஜில்லாக்களில் தகுதி யுள்ள தொகுதிகளுக்குப் பகிர்ந்து கொடுக்க அந்தந்த ஜில்லாக்களிலுள்ள ஜில்லா ஜூனியர் ரெட் - கிராஸ் சப் கமிட்டிகளை வேண்டிக்கொள்ளப்படும்

---

## பூந்தமல்லியிலுள்ள குருடர் பள்ளிக்கூடத்தில் ஜூனியர் ரெட் கிராஸ் சங்க ஆரம்ப விழா

1954-ஆம் வருஷம் நவம்பர் மாதம் 18-ஆந்தேதி வியாழக்கிழமையன்று ஜூனியர் ரெட் கிராஸ் சங்கம் பூந்தமல்லியிலுள்ள குருடர் அரசாங்கப் பள்ளிக்கூடத் தில் சென்னை ராஜ்ய ஜூனியர் ரெட் கிராஸ் சங்கக் கௌரவ டைரெக்டர் திரு. T. P சந்தானகிருஷ்ண நாயுடு அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. அச்சமயம் பள்ளிக்கூடத் தலைவர் திரு. B. A. நந்த கோபால் அவர்கள் தலைமை வகித்தார். திரு V. K. நரசிம்மன் அவர்கள் மூலம் சென்ற ஜூலை மாதம் ஜப் பானிய ரெட் கிராஸ் ஜூனியர் பகுதியிலிருந்து பெறப் பட்ட பின்னணிச் சங்கீத இசைத் தட்டுகளின் இன் னிசையும், குருட்டு மாணவர்களின் இசைத் தட்டுகளும் அவ்வாரம்ப விழாவின் விநோதமான அமிசங்களாகும். தங்கள் குரல்களின் இன்னிசையைக் கேட்கும்போது, குருட்டு மாணவர்களுக்கு ஏற்பட்ட மனவெழுச்சி எழுத முடியாததாய் இருந்தது. அவர்கள் ரெட் கிராஸைத் தொட்டு உணர்ந்து, அதைப்பற்றிய புல னறிவு பெறுவதற்காக, ஒரு மர ரெட் கிராஸ் அவர்க ளிடையே சுற்றிலும் அனுப்பப்பட்டது. இரண்டு நிறங்களுக்காகத் தெளிவாக இரண்டு விதமாக நெய் யப்பட்ட ரெட் கிராஸ் கொடி ஒன்றும் வருங்காலத் தில் உபயோகிக்கப்படும்.

---

## நிதி திரட்டல் பிரசாரம்

**சென்னை ராஜ்யக் கிளை :** இந்திய ரெட் கிராஸ் சங்க அலுவல்களை விளம்பரப்படுத்தவும், அங்கத்தினர்களைச் சேர்க்கவும், நிதி திரட்டவும் மறுபடியும் 1954-ஆம் வருஷம் நவம்பர் 1-ஆம் தேதி முதல் 30-ஆந் தேதிவரை இந்தியா முழுவதும் ஆண்டுப் பிரசாரத்திற்காக ஏற்பாடு செய்யப்பட்டது. மற்ற ராஜ்யங்களில் செய்யப்பட்டது போலவே, நம் சென்னை ராஜ்யக் கிளைப் பகுதியும் ஜில்லாக் கிளைப் பகுதிகளின் ஒத்துழைப்போடு ராஜ்யம் முழுவதும் பிரசாரத்தை நடத்திற்று. பிரசாரத்தை ஆரம்பித்து வைக்க 1954-ஆம் வருஷம் நவம்பர் மாதம் 5-ஆந்தேதி வெள்ளிக்கிழமை சென்னை, மவுண்டு ரோடில் உள்ள ராஜாஜி ஹாலில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. லெஜிஸ்லேடிவ் கௌன்சில் அக்கிராசனாதிபதி டாக்டர் P. V. செரியன் தலைமையில் சென்னை முதல் மந்திரி திரு. K. காமராஜ நாடார் பிரசார விழாவை ஆரம்பித்து வைத்தார். அப்பொழுது கார்ப்பொரேஷன் பள்ளிக்கூட மாணவ, மாணவிகள் சுமார் 600 பேர் அணி வகுத்து இருந்தார்கள். முதல் மந்திரி பிரபல ரெட் கிராஸ் சங்க அங்கத்தினர் சூழ மாணவ மாணவிகளின் அணி வகுப்பைப் பார்வையிட்டார். முதல் மந்திரி முதலியோர் வரவேற்பு உரையில் உப தலைவர் நீதிபதி திரு. இராமசுவாமிக் கவுண்டர் அவர்கள், 'நோய்களையும் துன்பங்களையும் போக்கவும், பெரிதும் உணர்ச்சி வேகத்தோடு உழைக்கவும் தனிப்பட்ட சங்கம் வேண்டும்' என்று கூறினார்; மேலும், ரெட் கிராஸ் நிதி திரட்டலுக்குத் தாராளமாகப் பண உதவி செய்யப் பொது மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார்.

'போரிலும், சமாதானத்திலும் ரெட் கிராஸ் சங்கம் சிறந்த பணியாற்றுகின்றது. அதன் செயல் முறைகள் மனிதருக்கான நோய்களும் துன்பங்களும் இவ்வுலகில் உள்ளவரை வேண்டியிருக்கின்றன' என்று கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்கள் எழுதி அனுப்பிய செய்தியைக் காரியதரிசி வாசித்தார். திரு. K காமராஜ நாடார் பிரசாரத்தை ஆரம்பித்து வைக்கின்றபொழுது சங்கம் தன் பரோபகாரச் சேவைகளைச் செவ்வனே புரிய மக்கள் சங்க அங்கத்தினர்களாகவும், இயன்றவரையில் பெரிதும் பொருளுதவி செய்யுமாறும் வேண்டிக்கொண்டார். அவ்வமயம் ஆரம்ப விழா உரை ஆற்றிய சென்னைக் கார்ப்பொரேஷன் கவுன்சிலர் T. R. அனந்தநாயகி அம்மையார் தம்முடைய உணர்ச்சி ததும்பும் பேச்சுக்களால் மக்களுக்கு உற்சாகத்தை அளித்து, ரெட் கிராஸ் நிதிக்குத் தாராளமாக உதவவும், குறிப்பாகப் பெண்கள் உற்சாகமான விருப்பத்தோடு முன்வந்து இக்காரியத்திற்காக நிதி திரட்ட வேண்டும் எனவும் கேட்டுக்கொண்டார். அக்கிராசனாதிபதி, தாம் பேசுகையில், ரெட் கிராஸ் சங்கத்திற்கான முக்கியத்துவத்தை அறிவுறுத்தி, ரெட் கிராஸ் சங்கத்தில் மக்கள் ஏராளமாகச் சேர வேண்டும் எனக் கேட்டுக்கொண்டார். இறுதியாக, நிதி திரட்டல் பிரசாரக் கமிட்டியின் அக்கிராசனாதிபதி Dr. U. கிருஷ்ண ராவ் வந்தனோபசாரம் கூறுகையில், வீடுதோறும் சென்று நிதி திரட்ட உதவக் கல்லூரி மாணவர்களை வேண்டிக்கொண்டு, மக்களும் அதற்குத் தாராளமாக உதவுவர் எனத் தாம் எண்ணுவதாகவும் கூறினார். சென்னை அடையாறு அரசாங்கக் கர்நாடகச் சங்கீதக் கல்லூரி மாணவர்களின் 'ஜன கன மன' பாட்டுடன் விழா முடிவுற்றது. பாடும்பொழுது எடுக்கப்பட்ட போட்டோ இப்பிரதியில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. ஜூனியர் ரெட் கிராஸ் சங்க அணி வகுப்பில் பங்கு எடுத்துக்கொண்ட குழந்தைகளுக்கு 'ரெட் கிராஸ் சங்கத்திற்கு உதவி செய்' என வரையப்பெற்ற பெஜுன்கள் அளிக்கப்பட்டன.

### கோயம்புத்தூர் ஜில்லாக் கிளை

செஞ்சிலுவைச் சங்கம் பற்றி விளம்பரமும் நிதி திரட்டல் பிரசாரமும் நடத்தி வந்த மற்ற ஜில்லாக் கிளைப் பகுதிகளுள் கோயம்புத்தூர் கிளைப்பகுதி ஒன்றாகும். இக்கிளை ஸ்தாபனம் Dr. R. M. அழகப்ப செட்டியார் தலைமையில் பிரசார ஆரம்ப விழாவைக் கொண்டாட 3—11—1954ல் ஒரு பொதுக்கூட்டம் நடத்திற்று. சென்னை அசெம்பிளி சபாநாயகர் திரு. J சிவஷண்முகம் பிள்ளை விழாவை ஆரம்பித்து வைத்தார். கலெக்டர் திரு. P. K. நம்பியார், இது சம்பந்தமாக வைக்கப்பட்ட கண்காட்சியைத் திறந்து வைத்தார். சங்கத் தலைவர் ஸ்ரீமதி கௌரி நம்பியார் எல்லோரையும் வரவேற்றார். அடுத்தபடியாகப் பேசிய கிளை ஸ்தாபனக் காரியதரிசி ஸ்ரீமதி சாவித்திரி ஷண்முகம் ஜில்லாவில் கிளை ஸ்தாபனம் நடத்திவரும் நல்ல உபயோகமான வேலைகளைச் சுருக்கிக் கூறினார். அக்கிராசனாதிபதி தம் உரையில் நிதியின் முக்கியத்துவத்தை வற்புறுத்தி, சங்கத்தில் அநேகர் சேர்ந்து, துன்புறும் மனித சமுதாயத்திற்குப் பணியாற்றுவர் எனக் கருதுவதாகக் கூறினார். திரு. J. சிவஷண்முகம் பிள்ளை பிரசார விழாவை ஆரம்பித்து வைக்கும் பொழுது, செஞ்சிலுவைச் சங்கம் சர்வதேச சங்கம் எனக் கூறி, பொதுமக்கள் பெரிதும் நிதியுதவி அளிக்க வேண்டுமெனவும், சங்க அங்கத்தினர் கிராமங்களில் செயலாற்ற வேண்டுமெனவும் கேட்டுக்கொண்டார். கிளை ஸ்தாபனத்தின் கூட்டுக் காரியதரிசி திரு. S R. சந்திரன் வந்தனோபசாரம் கூற, கூட்டம் முடிந்தது.

# ஜூனியர் ரெட் கிராஸ் ஆலோசனையாளர்களுக்கான (Counsellor) பயிற்சி முறைமைகள்

## ஜில்லாக்களின் அறிக்கை

### சென்னை :

1954-ஆம் வருஷம் அக்டோபர் மாத சஞ்சிகையில் ஏற்கெனவே வெளியிடப்பட்ட அறிக்கையின்படி, இம் மாத சஞ்சிகையில் இந்திய ரெட் கிராஸ் சங்கத்தின் சென்னை ராஜ்யக் கிளை கௌரவக் காரியதரிசியாரான ஸ்ரீ சி. அமிர்த கணேசனால் 1954-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 9-ஆந்தேதியன்று மாலை 4-30 மணிக்கு ஷை பயிற்சி துவக்க விழா தொடங்கப்பட்டது என்று சைதாப்பேட்டையிலுள்ள ஆசிரியக் கல்லூரி யின் உதவி போதகர் (Assistant Lecturer) ஸ்ரீ T. R. லக்ஷ்மிநாராயணன் அறிவிக்கிறார். திருத்தம் செய்யப் பட்ட பாடத் திட்டங்களைக்கொண்டு பயிற்சி வகுப்பு கள் ஆறு சனிக்கிழமைகளில் மாலை 2 மணியிலிருந்து 5 மணி வரையில் நடத்தப்படுகின்றன. 35 மாணவர் களும், 12 சங்க அங்கத்தினர்களும் பயிற்சி பெறுகின் றார்கள். இப்பயிற்சியானது சென்னை ராஜ்ய ஜூனியர் ரெட் கிராஸ் கௌரவ டைரெக்டருடன் அடிக்கடி சம் பந்தப்பட்டிருப்பதனால், பயிற்சியாளர்கள் அவருடைய பேருழைப்பினால் ஊக்கம் அடைகின்றார்கள். அந்த தொடர்பினால் இப்பயிற்சியே தனிப்பெரும் நன்மை யைப் பெறுகின்றது. மாடல் உயர்தரக் கலாசாலை, ஆசிரியர் கல்லூரி ஆகியவைகளிலுள்ள ஆசிரியர்கள், மாணவர் விடுதி டாக்டர், டைரெக்டர் ஆப் பப்ளிக் ஹெல்த் ஆபிஸைச் சேர்ந்த ஆகாரப் பொருள்களின் ஆராய்ச்சியாளர்கள் முதலியவர்கள் வெவ்வேறு நாட் களில் பயிற்சியாளர்களுக்குச் சொல்லிக் கொடுத்து, அவர்களுடைய செயல்களுக்கு வழிகாட்டி வருகின்றார் கள். திரைப்படக் காட்சி, மாடல் உயர்தரக் கலாசாலை ஜூனியர்களுடைய ஆரோக்கிய நாடகச் செயல்கள், டி. பி. தேக ஆரோக்கியாசிரமம் T. B. Sanatorium, பயிற்சியாளர்களால் தோற்றுவிக்கப்பட்ட பொருள் காட்சிகள் முதலியவைகள் பயிற்சியின் முக்கிய அமி சங்களாகும். 1954-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 19-ஆம் தேதியன்று சென்னை லெஜிஸ்லேடிவ் கௌன் சில் அக்கிராசனாதிபதி Dr. P. V. செரியன் தலைமையில் வந்தனோபசாரக்கூட்டம் நடைபெற்றது. ஸெயிண்டு ஜான் ஆம்புலன்ஸ், முதல் உதவி நற்சாட்சிப் பத்திரங் கள் (First Aid Certificates) முதலிய முறைகளும் தோற்றுவிக்கப்பட்டன. பயிற்சியாளர்கள் அனைவரும் ரெட் கிராஸ் சங்கத்தின் அங்கத்தினர்களாகப் பதிவு செய்துகொள்ளப்பட்டார்கள். அவர்கள் ரூ. 18-2-0ஐ நன்கொடையாகவும், அஸ்ஸாமிலும், பீஹாரிலும் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்ட ஜனங்களின் நிவார ணத்திற்காகத் துணிகளையும் வசூலித்துத் தந்தார்கள். பயிற்சி வகுப்பில் கலந்துகொண்ட 50 பயிற்சியாளர் களில் இறுதியில் நடத்தப்பட்ட எழுத்துத் தேர் விலும், செயல்முறைத் தேர்விலும் (Written and Practical Tests) 47 பயிற்சியாளர்கள் வெற்றி பெற்றார்கள்.

### நீலகிரி (கூனூர்) :

1954-ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 4-ஆந்தேதி முனிசிபல் உயர்தரக் கலாசாலை மண்டபத்தில் கவுன் சிலர்களின் பயிற்சிப் பகுதி கூனூரில் கவர்ன்மெண்டு லாலி ஆஸ்பத்திரி (Government Lawly Hospital) யில் சிவில் அஸிஸ்டெண்டு சர்ஜன் Dr. E. R. மேனன், M. B., B. S. அவர்களால் துவக்கி வைக்கப்பட்டு, 1954-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 16-ஆந்தேதி யுடன் முடிவுற்றது என்று கூனூர் ஜில்லா ரெட் கிராஸ் பிராஞ்சின் காரியதரிசி அறிவிக்கிறார். தனி நபர்கள் இரண்டு பேர் உள்பட 53 ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டு வந்தன. பயிற்சி இறுதியில் நடத்தப்பட்ட எழுத்துத் தேர்விலும், செயல் முறைத் தேர்விலும் எல்லோரும் வெற்றி பெற்றனர். கைத் தொழில் கலையில் அனுபவ ஞானமும், முக்கியத்துவ மும் வாய்ந்த அறிஞர் பலர் பயிற்சியாளர்களுக்குப் பிர சங்கம் செய்தனர். வாணர்ப்பேட்டை (Vannarpet) முனிசிபல் ஆரம்பப் பாடசாலைத் தலைமையாசிரியரின் பொறுப்பில் கைத்தொழிற்கலைப் பகுதி இருந்தது. இறுதியில் நீலகிரி ஜில்லாக் கல்வி அதிகாரியானவர் 1954-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 16-ஆந்தேதி யன்று வந்தனோபசாரப் பிரசங்கம் செய்தார். செயிண்டு மேரி உயர்தர ஆரம்பப் பாடசாலை ஜூனி யர் ரெட் கிராஸ் தொகுதி கண்காட்சி நடத்திற்று. அக்கண்காட்சியில் பயிற்சியாளர்களால் தயாரிக்கப் பட்ட ரெட் கிராஸ் படங்கள் அக்கிராசனாதிபதியை யும், விஜயம் செய்த பொதுமக்களையும் மிகவும் கவர்ந் தன. சென்னை ராஜ்யப் பிராஞ்சினரால் கண்காட்சி யில் வைப்பதற்கென்று கொடுக்கப்பட்ட பெட்டியும் கண்காட்சியில் வைக்கப்பட்டது கண்காட்சிக்கு விஜயம் செய்தவர்கள் அப்பெட்டியைப் பற்றிப் புகழ்ந்து பேசினார்கள். பயிற்சிப் பகுதி வெற்றிகர மாய் முடிந்தது என்றும், அப்பயிற்சியில் கலந்து கொண்டோர் அனைவருக்கும் நன்றி தெரிவிப்பதாகவும் காரியதரிசி கூறினார்.

## சங்கத் தொகுதிகளைப் பற்றிய செய்திகள்

### தென்னாற்காடு :

**A. N. M.** பாடசாலை, பெரும்புகை (**Perumbugai**), செஞ்சி போஸ்டு, தென்னாற்காடு ஜில்லா.

*சங்கத்தில் 47 அங்கத்தினர்கள் இருக்கின்றார்கள். சங்கம் 6 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பிரிவும் முறையே சுகாதாரம், சேவை, சுத்தம், கடிதப் போக்கு வரவு, கைத்தொழில், நூல் நிலையம் என்னும் பகுதிகளை மேற்பார்வை செய்கின்றது. சங்கம் மாதத்திற்கு இரண்டு முறை கூட்டத்தை நடத்துகின்றது. முதல் உதவி பெட்டியில் இருக்க வேண்டிய மருந்துகளை வாங்குவதற்காகப் பொது ஜனங்களிடமிருந்து பணம் வசூல் செய்யப்படுகின்றது.*

**P.** முத்தையர் உயர்தர ஆரம்பப் பாடசாலை, பன்ருட்டி (**Panruti**)), தென்னாற்காடு ஜில்லா.

*சங்க அங்கத்தினர்கள், சங்க உத்தியோகஸ்தர்களுடன் 1954-ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 5-ஆந்தேதியன்று காலையில் அருகிலுள்ள சேரிக்குச் சென்று அதைச் சுற்றியுள்ள இடங்களைச் சுத்தஞ் செய்தார்கள்; பின்பு அன்று மாலையில் ஒரு பொதுக்கூட்டம் அமைத்து, கிராமச் சுகாதாரத்தைப் பற்றிப் பேசினார்கள். மேலும், அங்கத்தினர்கள் படப் போட்டிற்காக நமூனாக்களையும் தயாரித்தார்கள்.*

போர்டு ஆரம்பப் பாடசாலை, திருப்பாயர் தக்கா, இலவநசூர் போஸ்டு (**Thirupayar Thakka, Elavanasur P. O.,**) திருக்கோவிலூர் தாலூக்கா, தென்னாற்காடு ஜில்லா.

*1954-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் 22-ஆந்தேதியன்று முதல் ஆண்டு விழா(1st Anniversary)வை சங்கம் நடத்திற்று. உளுந்தூர்ப்பேட்டைப் பகுதிப் பாடசாலைகளின் மேற்பார்வையாளர் திரு. T. K. மாணிக்கம் அவர்கள் தலைமை வகித்தார். பாடசாலையின் தலைமையாசிரியர் அக்கிராசனாதிபதியையும், மற்ற பிரமுகர்களையும் வரவேற்றார். ஜூனியர்கள் தங்கள் வேலைகளை நன்றாகவும் ஒழுங்காகவும் செய்தார்கள் என்று திரு. மன்னார் ரெட்டியார் புகழ்ந்து பேசி, அவர்களுக்குப் பொத்தான்களை வழங்கினார். 'ஜூனியர் ரெட் கிராஸும், ஆசிரியர்களும்' என்னும் விஷயத்தைப்பற்றித் திரு. வித்துவான் வரதாச்சாரி பேசினார். கூட்டத்தில் மிட்டாய்கள் வழங்கப்பட்டன.*

### கோயம்புத்தூர் :

ஜில்லா போர்டு ஆரம்பப் பாடசாலை, கன்னிவாடி (**Kannivady**) போஸ்டு, via கரூர், தாராபுரம் தாலூக்கா, கோயம்புத்தூர் ஜில்லா.

*1954-ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 24-ஆந்தேதி சங்கத் தொகுதி மாதாந்திரக் கூட்டம் நடத்திற்று. அப்பொழுது தொகுதியின் அங்கத்தினர்களில் ஒருவர் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். சென்ற கூட்டத்தின் நிகழ்ச்சிகளை வாசித்து முடித்த பின், அங்கத்தினர்களுள் சிலர் 'வீட்டுச் சுகாதாரம்' என்னும் பொருள் பற்றிப் பேசினர்.*

போர்டு உயர்தர ஆரம்பப் பாடசாலை, ஊததுக்குளி (**Uttukuli**), ஈரோடு தாலூக்கா, கோயம்புத்தூர் ஜில்லா.

*சங்கத் தொகுதி ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பிரிவும் கீழே கொடுத்துள்ள ஐந்து காரியங்களைக் கவனித்துக்கொள்கின்றன :—*

*(1) முதல் உதவியைக் கற்றுக்கொள்ளுதல் (2) பாடசாலை சிற்றுண்டி சாலையை நடத்துதல் (3) பழைய புத்தகங்கள், பலகைகள் முதலியவைகளைச் சேகரித்தல் (4) குடி தண்ணீர் சப்ளை செய்தல் (5) ஆல்பங்கள் தயாரித்தல். 1954-ஆம் வருஷம் நவம்பர் மாதம் எட்டாம் தேதியன்று சங்கத் தொகுதியினரால் ரெட்கிராஸ் வாரக் கொண்டாட்டம் கொண்டாடப்பட்டது. அப்பொழுது காலையில் ரெட் கிராஸ் கொடிகளுடன் ஊர்வலம் சென்று, மாலையில் டாக்டர் S. அகஸ்தாத் (S. Agasthath), B.Sc., M. B., B. S., தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. அக்கூட்டத்தில் பலர் 'ஜூனியர் ரெட் கிராஸும், அதன் செய்கைகளும்' என்னும் விஷயம் பற்றிப் பேசினர். உண்டி மூலமாக ரூபாய் 32-7-9 வசூலாயிற்று.*

### சென்னை :

கார்ப்பொரேஷன் உயர்தர ஆரம்பப் பாடசாலை, அங்கப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

*1954-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 23-ஆந்தேதி சனிக்கிழமை சென்னைக் கார்ப்பொரேஷன் கவுன்சிலர் டாக்டர் I. அஜீஸுடின் (I. Azizuddin) M. B., B. S., தலைமையில் ஜூனியர் ரெட் கிராஸ் தொகுதி துவக்கப்பட்டது. பாடசாலைத் தலைமையாசிரியர் விழாவிற்கு வந்தவர்களை வரவேற்றார். அவ்விழாவில் பாடசாலைகளின் டெபுடி மேற்பார்வையாளர் (Deputy Inspector) குமாரி E. I. பத்மாவதி அம்மையார், M. A., L. T. அவர்கள் 'ஜூனியர் ரெட் கிராஸும்,*

அதன் செயல் முறைகளும்' என்பதை விளக்கி, சங்கத் தொகுதி செய்த வேலைகளைப் பாராட்டிப் பேசினார். கூட்டத் தலைவர் பாடசாலையின் சங்க அங்கத்தினர்களும், இதர உத்தியோகஸ்தர்களும் செய்த உயர்ந்த செயல்களைப் பற்றிப் பேசி, வருங்காலச் செயல்களில் அவர்கள் வெற்றியடைய வேண்டுமென்று தாம் விரும்புவதாகத் தம் பிரசங்கத்தில் கூறினார். பின்பு ஜூனியர்களால் பல வேடிக்கை காட்சிகள் (Variety Entertainment) நடத்தப்பட்டன. சங்கத் தொகுதியின் கவுன்சிலர் வந்தனோபசாரம் கூறினவுடன் விழா முடிவுற்றது.

## சேலம் :

போர்டு ஆரம்பப் பாடசாலை, நரசிங்கபுரம்,
ஆத்தூர் தாலூக்கா, சேலம் ஜில்லா.

*1954*-ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 23-ஆந்தேதி ஜூனியர் ரெட் கிராஸ் சங்கத் தொகுதிக் கூட்டம் நடந்தது. அக்கூட்டத்திற்குப் பாடசாலைத் தலைமையாசிரியர் திரு. D. அங்கன்ன நாயுடு (D. Anganna Naidu) தலைமை வகித்தார். சங்க ஜூனியர்களன்றி, பாடசாலை ஆசிரியர்கள் எல்லோரும் கூட்டத்திற்கு வந்தனர். ஜூனியர் ரெட் கிராஸைப் பற்றிப் பலர் பேசினர். சங்க நிர்வாகஸ்தர்களைத் தேர்ந்து எடுத்தபின் கூட்டம் முடிந்தது.

போர்டு உயர்தரப் பாடசாலை, சங்கரி (Sankari),
சேலம் ஜில்லா.

*1954*-ஆம் வருஷம் அக்டோபர் மாதம் 27-ஆந்தேதி டாக்டர் நாராயண மேனன், M. B., B. S. அவர்களின் தலைமையில் பாடசாலையின் ஜூனியர் ரெட் கிராஸ் சங்கத் தொகுதி துவக்கப்பட்டது. காயமுற்ற மாணவர்களுக்கு அங்கத்தினர்கள் முதலுதவி செய்வதற்காக முதலுதவி பெட்டி வைத்திருப்பதாகவும், அதற்காக ஏழை முதலியவர்களுக்கு உதவ பணம் வசூலிக்கப்பட்டிருப்பதாகவும் சங்கத் தொகுதியின் கவுன்சிலர் அவருடைய அறிக்கையில் தெரிவிக்கிறார். ராவ் சாகிப் திரு. நாராயணசாமி நாயுடு அவர்கள் 'மாணவர்களும், அவர்களுடைய சமூக வேலைகளும்' என்னும் பொருள்பற்றி அங்கத்தினர்களுக்குச் சொற்பொழிவு ஆற்றினார்.

## கிழக்குத் தஞ்சை :

ஸ்ரீராமகிருஷ்ண ஆரமபப் பாடசாலை,
சித்தாம்பூர் (Chittambore), கிழக்குத் தஞ்சை ஜில்லா.

*1954*-ஆம் வருஷம் நவம்பர் மாதம் 2, 3-ஆந்தேதி ஆகிய இரண்டு தினங்களில் ஜூனியர்கள் அடுத்துள்ள சேரிக்கு ஊர்வலமாகச் சென்று, அதைச் சுத்தம் செய்தார்கள்; அங்கு வாழும் மக்களுக்கு, அவர்கள் வசிக்கும் இடங்களையும், சுற்றுப்புறங்களையும் சுத்தமாகவும், நாகரிகமாகவும் வைத்திருக்க வேண்டுமென்று புத்திமதி கூறினார்கள்.

செயிண்டு தெரிசாப் பெண்கள் உயர்தர ஆரம்பப்
பாடசாலை, தரங்கம்பாடி, தஞ்சை ஜில்லா.

இப்பாடசாலை 400 அனாதைக் குழந்தைகளை நிர்வகித்து, அவர்களுக்கு இலவசக் கல்வி அளித்து வருகின்றது. சங்கத் தொகுதியின் அங்கத்தினர்கள் பாடசாலைக் குழந்தைகள் சுத்தமாய் இருப்பதைக் கவனித்துக்கொள்கின்றார்கள். அக்டோபர் மாத ஜூனியர் சஞ்சிகையில் பிரசுரித்தபடி, வட இந்தியாவில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட ஜனங்களின் நிவாரணத்திற்காக நன்கொடைகளையும், துணிகளையும் வசூலித்து, சென்னை ராஜ்யக் கிளைக்கு அனுப்பி வைத்தது. சுற்றுப்புறத்தில் வசிக்கும் ஜனங்களுடன் அங்கத்தினர்கள் நெருக்கமாகப் பழகி, அவர்கள் உபயோகமானதும், நன்மையுள்ளதுமான காரியங்களைச் செய்வதற்கு அவர்கள் மனதில் பதியுமாறு செய்கின்றார்கள். 'நன்கொடைகள்' என்னும் தலைப்பில் பாடசாலையிலிருந்து பெறப்பட்ட நன்கொடைகளைப் பெற்றுக்கொண்டோம் என்பதை இந்த சஞ்சிகையில் பிரசுரித்திருக்கின்றோம்.—பத்திராதிபர், "மதராஸ் ஜூனியர்."

## திருச்சிராப்பள்ளி :

போர்டு உயர்தர ஆரம்பப் பாடசாலை, கிலுமத்தூர்,
லப்பைகுடிகாடு (Kilumathur, Labbaikudikadu),
திருச்சிராப்பள்ளி ஜில்லா.

*1954*-ஆம் வருஷம் ஜூலை மாதம் 28-ஆந்தேதி பாடசாலையின் தலைமையாசிரியர் தலைமையில் சங்கத் தொகுதியின் கூட்டம் நடைபெற்றது. ஜூனியர் ரெட் கிராஸ் சங்கத் தொகுதியும், பாடசாலையில் நடத்துவதன் முக்கியத்துவத்தையும் பற்றிக் கவுன்சிலர் பேசினார். சங்கத் தொகுதியில் 47 சிறுவர்களும், 15 சிறுமிகளும் இருக்கின்றார்கள்.

முனிசிபல் பெண்கள் பாடசாலை, தென் சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம், திருச்சிராப்பள்ளி ஜில்லா.

ஜில்லா ரெட் கிராஸ் திருச்சிராப்பள்ளி பிராஞ்சு, கூட்டுக் கௌரவக் காரியதரிசி திரு. A. D. M. பிரகாசம் அவர்கள் தலைமையில் சங்கத் தொகுதி ஆண்டு விழாவை வெற்றிகரமாக நடத்திற்று. எல்லா அங்கத்தினர்களும் அதில் பங்கெடுத்துக்கொண்டார்கள். விழாவில் எல்லோரும் விரும்பத் தகுந்த நிகழ்ச்சிகளை அமைத்த ஜூனியர்களையும், சங்கத்தில் மிகவும் ஊக்கம் காட்டிய பள்ளிக்கூடத் தலைவியரர் அவர்களையும்

புகழ்படப் பேசி, அவர்களுக்குக் கூட்டத் தலைவர் நன்றி கூறினர்.

## திருநெல்வேலி :

இந்து உயாதர ஆரமபப் பாடசாலை, சுநதரபாணடியபுரம, (via) தென்காசி, திருநெல்வேலி ஜிலலா.

*1954-ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் 13-ஆந்தேதி சங்கத் தொகுதியின் கூட்டம் கௌன்சிலரின் தலைமையில் நடைபெற்றது. சென்ற கூட்டத்தின் நிகழ்ச்சிகளை வாசித்து, ஆறு தீர்மானங்களை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். (1) ஏழைகள் உடுத்திக் கொள்வதற்குத் துணிகளையும், அவர்களுக்கு வேண்டிய பொருள்களையும் பொதுமக்களிடமிருந்து நன் கொடையாகப் பெற்று, அவர்களுக்கு வழங்குதல். (2) முதல் உதவிக்காக வேண்டிய பொருள்களைச் சேகரித்தல். (3) நூல் நிலையம் (Library) ஆரம்பிப்பதற்காகப் பழைய புத்தகங்களைச் சேகரித்தல் முதலிய இன்னும் பல வேலைகளைச் செய்வது ஆறு தீர்மானங்களில் ஒரு தீர்மானமாகும்.*

அருணோதய ஆரம்பப் பாடசாலை, விஸ்வநாதப்பேரி (Visvanathapperi) திருநெல்வேலி ஜில்லா

*1954-ஆம் வருஷம் ஜூலை மாதம் சங்கத் தொகுதியின் முதல் கூட்டம் பாடசாலையின் மானேஜர் திரு. S. முத்தையா முதலியார் அவர்கள் தலைமையில் நடந்தது. 'ஜூனியர் ரெட் கிராஸும், அதன் வேலைகளும்' என்னும் விஷயத்தைப்பற்றிக் கவுன்சிலர் அங்கத்தினர்களுக்கு விளக்கிக் கூறினர். இக்கூட்டத்தில் ஆபீஸ் அலுவலாளர்கள் (Office-bearers) தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். 90 சிறுவர்களும் சிறுமிகளும் இத் தொகுதியின் அங்கத்தினர்களாகப் பதிவு செய்யப் பட்டார்கள்.*

---

## ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டிகள்

1. திரு. R. ராஜகோபால், கன்வீனர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, 132, கீழ் மாடவீதி, **மதுரை.**
2. திரு. R. நாராயணன், லையசன் (Liaison) ஆபீஸர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, ராஜா உயர்தரக் கலாசாலை, **இராமநாதபுரம்.**
3. திரு. C. துரைசாமய்யா, கன்வீனர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, ரெட் கிராஸ் ஜில்லாக் கிளை, **வேலூர்** (வட ஆற்காடு ஜில்லா).
4. திரு. T. D. சீனிவாசன், கன்வீனர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, லிட்டில் பிளவர் (Little Flower) உயர்தரக் கலாசாலை, **சேலம்**
5. திரு. சாமுவேல் ஜோசப், கௌரவக் காரியதரிசி, ஜூனியர் ரெட் கிராஸ், ரெட் கிராஸ் ஜில்லாக் கிளை, **பாளயங்கோட்டை** (திருநெல்வேலி ஜில்லா)
6. திரு. A. D. M. பிரகாசம், கூட்டுக் காரியதரிசி, ரெட் கிராஸ் ஜில்லாக் கிளை, தெப்பக்குளம் **P. O., திருச்சிராப்பள்ளி.**
7. திரு. R. மெசய்யா தாஸ், கன்வீனர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, 7-A, பழைய போலீஸ் லைன் தெரு, **செங்கற்பட்டு.**
8. திரு. J. S. நெசய்யா, கன்வீனர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, நீலகிரி ஹவுஸ், வேலிபாளையம், **நாகப்பட்டினம்** (தஞ்சை ஜில்லா).
9. திரு. K. பாலகிருஷ்ணன், காரியதரிசி, பொக்கிஷதாரர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, கல்யாணசுந்தரம் உயர்தரக் கலாசாலை, தஞ்சை (கீழ்த் தஞ்சை ஜில்லா).
10. திரு. V. P. இராமசாமி, கௌரவக் காரியதரிசி, ரெட் கிராஸ் ஜில்லாக் கிளை, கூனூர், (நீலகிரி ஜில்லா).
11. திரு. R. S. சந்திரன், கூட்டுக் காரியதரிசி, ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, இந்திய ரெட் கிராஸ் தொகுதி, ஜில்லாக் கிளை, **கோயம்புத்தூர்.**
12. ரெவரெண்டு Fr ஞானப்பிரகாசம், கன்வீனர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, **கடலூர்**, தென்னாற்காடு ஜில்லா.
13. திரு. K. கோவிந்த பாய், கன்வீனர், ஜில்லா ஜூனியர் ரெட் கிராஸ் சப் கமிட்டி, தலைமையாசிரியர், காசிகா உயர்தரக் கலாசாலை, **ஜெப்பு (Jeppu)** (தென் கன்னட ஜில்லா)

மதுரை, இராமநாதபுரம், வேலூர், சேலம், செங்கற்பட்டு, கூனூர், கடலூர் ஆகிய ஜில்லாக்களில் உள்ள ரெஜிஸ்தரான தொகுதிகளினிடையே கொடுப்பதற்காக அத்தொகுதிகளின் கன்வீனர்களுக்கு 'மதறாஸ் ஜூனியர்' அனுப்பப்படும்.

---

## நன்கொடைகள்

*(சென்ற அக்டோபர் மாத சஞ்சிகையின் தொடர்ச்சி) :*

| | | | ரூ. | அ | பை |
|---|---|---|---|---|---|
| 1. | ஜெயலட்சுமி விலாஸ் உயர்தர ஆரம்பப் பாடசாலை, மன்னார்குடி, தஞ்சாவூர் | வெள்ள நிவாரண நிதிக்காக | 5 | 0 | 0 |
| 2. | சாவித்திரி வித்தியாசாலை, தெப்பக்குளம் போஸ்டு, திருச்சிராப்பள்ளி | ,, | 3 | 0 | 0 |
| 3. | T. D. T. A. உயர்தர ஆரம்பப் பாடசாலை, கைலாசபுரம், திருநெல்வேலி ஜில்லா | ,, | 5 | 0 | 0 |
| 4. | போர்டு உயர்தர ஆரம்பப் பாடசாலை, இடையூர், கிழக்குத் தஞ்சை ஜில்லா | ,, | 8 | 7 | 0 |
| 5. | ஆதித்தியன் இந்து ஆரம்பப் பாடசாலை, ஸ்ரீ வைகுந்தம், திருநெல்வேலி ஜில்லா | ,, | 9 | 6 | 0 |
| 6 | S. T. பிராஞ்சு பாடசாலை, எரல் P. O., (Eral P. O) ஸ்ரீவைகுந்தம், திருநெல்வேலி ஜில்லா | ,, | 2 | 8 | 0 |
| 7. | முனிசிபல் ஆரம்பப் பாடசாலை, குகை, சேலம் | ,, | 3 | 0 | 0 |
| 8. | இந்து ஆரம்பப் பாடசாலை, திருப்பாணிகரிசல் குளம் (Thirupanikarisalkulam), திருநெல்வேலி ஜில்லா | ,, | 4 | 0 | 0 |
| 9. | செயின்டு தெரிஸா உயர்தர ஆரம்பப் பாடசாலை, தரங்கம்பாடி, மேற்குத் தஞ்சை ஜில்லா | ,, | 20 | 0 | 0 |
| 10. | முனிசிபல் பெண்கள் பாடசாலை, தென் சித்திரை வீதி, ஸ்ரீரங்கம் (Srirangam) திருச்சி ஜில்லா | ரெட் கிராஸ் வேலைக்காக | 2 | 0 | 0 |
| 11. | P. M. ஆர்னல்லாஸ் உயர்தர ஆரம்பப் பாடசாலை, தூத்துக்குடி | ,, | 5 | 0 | 0 |
| 12. | செயின்டு பிரான்ஸிஸ் ஸேவியர் உயர்தர ஆரம்பப் பாடசாலை, ஆள்வார்பேட்டை, சென்னை | ,, | 5 | 0 | 0 |
| 13. | விம்கோ ஆரம்பப் பாடசாலை, வண்ணாரப் பேட்டை, சென்னை-21 | ,, | 8 | 10 | 0 |
| 14 | போர்டு உயர்தரப் பாடசாலை, ஊத்துக்குளி (Uttukuli), ஈரோடு தாலூக்கா, கோயம்புத்தூர் ஜில்லா | ,, | 2 | 3 | 0 |
| 15. | செயின்டு பிலோமினு உயர்தர ஆரம்பப் பாடசாலை, பிகம்பூர் (Begampore), மதுரை | ,, | 5 | 0 | 0 |
| 16. | ஜூனியர் ரெட் கிராஸ் கவுன்சிலர் பயிற்சியிலுள்ள பயிற்சியாளர்கள், ஆசிரியர் கல்லூரி, சைதாப்பேட்டை | ,, | 18 | 2 | 0 |
| 17. | முனிசிபல் பெண்கள் உயர்தர ஆரம்பப் பாடசாலை, சௌராஷ்டிர வீதி தஞ்சாவூர் | ,, | 6 | 0 | 0 |

பணம் வசூலானதுமல்லாமல் 19 மேஜை விரிப்புத் துணிகள், டவல்கள், தலையணை உறைகள், பிராக்ஸ் (Frocks) முதலிய பொருள்களைப் பயிற்சியாளர்களிடமிருந்தும், வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட குழந்தைகளுக்காக 12 குழந்தை உடைகளை செயின்டு தெரிஸா பெண்கள் உயர்தர ஆரம்பப் பாடசாலை ஜூனியர்களிடமிருந்தும் பெற்றோம். மேற்படி பரிசுப் பொருள்களையும், பணத்தையும் அனுப்பி வைத்த நன்கொடையாளர்களுக்கு நாங்கள் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.

—பத்திராதிபர், "மதருஸ் ஜூனியர்."

*List of Junior Red Cross Trained Counsellors continued—from OCTOBER issue.*

ELLURU (West Godavari District)—*Contd.*

2622 N. Subbarao, Mun. Ele. School, Elluru.

2623 D. Bhaskara Sastri, do.

2624 T. Anandarao, do.

2625 Konduri Subbarao, B.A., Board High School, Pedapadi.

2626 G. Nagabhushanam, Aided Higher Ele. School, Nayudugudu.

2627 S. Nageswaraswamy, Board School, Chatnaparru, Peringududen.

2628 L Narasimhamurthy, do.

2629 S. Raghavarao, do.

2630 Vada Venkateswarlu, F. V. R's. Aided School, Elluru.

2631 K. Srinivasan, Aided Ele. School, Ramannapalle.

2632 P. Venkatrao, Bd. Ele. School, Yepur.

2633 E. P Agnes, Mun Ele School, Elluru

2634 L P. Veerabhadrarao, Bd. High School, Pedapadu.

2635 P. Subrahmanayachary, Board Ele. School, Mandur.

2636 M. Narasimharao, Elluru Mun. School.

2637 Ch. Venkatrao. do.

2638 F. V. Sugunamma, Municipal School, Elluru.

2639 Ch. Subrahmanyan, do.

2640 B. Bhikshapatirao, Dt. Bd. Ele. School, Mundoor

2641 K. Achayya, do. Chataparru

2642 K. Lakshminarayana, do Ungutoor.

2643 G. Narasimharao, do. Sanivarapetu.

2644 N Basavaiah, do. Kokkurapadu.

2645 R. L. Narasimhan, Dt. Bd. Ele. School, Somavarappadu.

2646 Bh Sankaran, Municipal Ele. School, Elluru.

2647 V. Narasimhan, Dt. Board Ele. School, Dugguala.

2648 G. Nageswararao, do.

2649 G. Venkatramayya, do. Tirumalampalu.

2650 K Sitaramulu, Bd. Ele. School, Ponangi.

2651 L Gangaiah, Dt Bd. Ele School, Kothur.

2652 S Kotinagaiah, do. Somavarappadu.

2653 P Ramamurthy, Dt. Bd. Ele. School, Elluru Municipality.

2654 F S Nancharamma, Saraswathi Aided Ele. School, Elluru.

2655 P Ramarao, Dt. Bd. Ele. School, Chatapurru.

2656 K. Lakshmayya, do. Dwaraka Tirumalu.

2657 D. V. L Narasimhacharyulu, do. Dorasampadu.

2658 Y Satyanarayana, do.

2659 S Subbarao, Bd. Ele. School, Kakaran.

2660 P A S Ramarao, S E. S. D. Mun. High School, Oluru.

2661 P. R. Satyanarayanamurthy do. Pathur of Kamavarapukote.

2662 K Sitaramanjaneyalu, E V R.'s High School, Elluru.

2663 Pasumarti Sitaramayya, Board. Ele. School, Kokkurapadu

2664 Kandukuri Sundarsan Sarma, Aided Higher Ele. School, Rallakunta.

2665 Pangusu Satyanarayana Rao, Aided Ele. School, Ammapalu, Elluru.

2666 Bala Peddiraju, Dendulur Bd. Ele. School, Ammapalu, Elluru.

2667 K. Sanyasi, Dt. Board Ele. School, Dwaraka Tirumalu

2668 G. Govindarajulu, Sanivarapeta Aided Higher Ele School, Dwaraka, Tirumalu.

2669 Bh. Radhakrishnamurthy, Sanivarapeta Girls' School, do.

2670 S D Krupavaram, Jogannagudem, C.M.S., do.

2671 M. Paparao, Bd Ele. School, Tadvai

2672 S Sivaramayya, Elluru Mun. School, Elluru.

2673 P. Sreeramulu, Pulla Bd. Ele. School, Elluru.

2674 P Suryanarayana, Ch. S M. M. School, Elluru.

2675 K Ch Ramanjayya, Dt Board Ele. School, Bhogapura

2676 G. Joseph, do. Bhimadole.

2677 J. V. R. Krishnamurti Sarma, Dt. Bd. Ele. School, Cherukulhi.

2678 M S. Ratnabai, Mun. Girls' School, South St, Elluru.

2679 T. Suppora, do. Eastern St., Elluru.

2680 B. Kanakaratnam, do. Western St., Elluru.

2681 J. Sikhamani, do. Ammapalem.

2682 S. L. Narasimhamurthy, do. Devinavarigudu.

2683 K Isac, do. Venkata Krishnapuram.

2684 K. Papayya Sastri, do. Ramannagudem.

2685 E S Blaneena, do. Tangellamudi.

2686 G Ramanujachary, do. Elluru.

---

Printed by K S S RAJAN at the Jupiter Press, Ltd., 109-C, Mount Road.Madras-18.
Published by The Indian Red Cross Society, Egmore, Madras-8